**பரலேவிகளின் குற்றச்சாட்டும் நமது மறுப்பும்: தேவ்பந்திகள் வஹ்ஹாபிகள் இதனை அவர்களின் முன்னோடிகளான பெரியார்கள் தங்களை வஹ்ஹாபிகள் என்பதாக ஏற்றுள்ளனர்**

**நமது மறுப்பு**: இந்த குற்றச்சாட்டானது பரலேவியர்களால் திரும்ப திரும்ப எடுத்து வைக்கப்படுகிறது. இதனின் உண்மை நிலையையும் தெளிவான விளக்கத்தையும் பார்ப்போம்! அல்லாஹ்வின் ஏகத்துவத்தை ஏற்றும்,நபியின் சுன்னத்தை பின்பற்றிக் கொண்டும் பித்அத் மற்றும் சடங்கு சம்பிராதயங்களை எதிர்ப்பவர்களுக்கு பித்வாதிகளால் சூட்டப்பட்ட பெயரானது "வஹ்ஹாபி" என்பதாகும்.இங்கு நாம் பித்அத்வாதிகளிடத்திலிருந்தே அதற்கான சான்றை தருகிறோம் அதனின் மூலம் உண்மையை

நாம் விளங்கிக் கொள்ளமுடியும். பரலேவிகளின் தலைவர் ரிளாகானிடத்தில்

கேட்கப்பட்ட கேள்வியையும் அதற்கு அவரின் பதிலையும் சுருக்கமாக காண்போம்!

கேள்வி: ஹள்ரத் அவர்களே! எங்களின் பகுதியில் நானூறு குடும்பங்கள் அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத்தை சேர்ந்தவர்கள் உள்ளார்கள்.இங்கு நிகாஹ்வின் போது வழமை என்னவெனில் இசை இசைப்போம் ( கழுத்தில் தொங்கவிட்டுக் கொண்டு இசைக்கப்படும் ஒரு வகையான இசை கருவி) ஏனெனில் எங்களின் மஜ்லிஸிற்கு வஹ்ஹாபிகள் கலந்து கொள்ளக்கூடாது என்பதற்காகும். வஹ்ஹாபிகளில் ஒருவர் இதனை தடுக்கிறார் அதுமட்டுமின்றி பாவமில்லாத காரியங்களையும் தடுக்கிறார் இதன் பேரில் நாம் இசை இசைப்பதை தடுத்துவிட்டால் மஹல்லாவில் வசிப்பவர்கள் வஹ்ஹாபிகளாக மாறிவிடுவார்களோ என்ற அபாயம் உள்ளது.

இதற்கு ரிளாகானின் பதில்: மார்க்கத்தில் அனுமதிக்கப்படாத செயலை ஏதேனும் இஸ்லாத்தை ஏற்காதவரான காபிர் தடுத்தார் எனில் அதற்காக அந்த காரியமானது அனுமதிக்கப்பட்டது என்பதாக சொல்லப்படாது.நாளை ஏதேனும் வஹ்ஹாபி டான்ஸ் ஆடுவதை தடுத்தால் அதனை அனுமதி என்பதாக கூறிவிடமுடியுமா? (ஆதாரம் பதாவா ரிஜ்விய்யா பாகம் 10 இரண்டாம் பகுதி பக்கம் 60 தாருல் உலூம் அம்ஜதிய்யா கராச்சி ) இதன் மூலம் பித்அத்வாதிகளின் சிந்தனையை அறிய முடிகிறது. இசை இசைப்பதை தடுப்பவர் ஒரு வஹ்ஹாபியாக உள்ளார்.இதனால் இசைப்பதற்கு அனுமதி கொடுங்கள் இல்லையெனில் முழு தெருவும் வஹ்ஹாபிகளாகிவிடுவார்கள் ( அல்லாஹ் பாதுகாப்பானாக!)

நமது பெரியோர்கள் தங்களை வஹ்ஹாபி என்று கூறுவதானது பித்அத்வாதிகளுக்கு

எதிரில் சொல்லப்படுவதாகும்.ஏனெனில் பித்அத்வாதிகள் சடங்குகள்,சம்பிரதாயங்களை தடுப்பவர்களை வஹ்ஹாபிகள் என்பதாக எண்ணுகிறார்கள்.இதனை முன்வைத்து நம்மை வஹ்ஹாபி என்றால் சரியானதுதான்.

மௌலானா ஹள்ரத் கலீல் அஹ்மத் சஹாரன்பூரி (ரஹ்) அவர்கள் எழுதியுள்ளார்கள்: இந்தியாவிலே " வஹ்ஹாபி" என்ற சொல்லானது இமாம்களின் தக்லீத் விடுபவர்களுக்கு சொல்லப்பட்டு வந்தது.பிறகு சுன்னத்தின் படி அமல் செய்பவர்கள் பித்அத் மற்றும் கெட்ட பாதையை விடுபவர்களுக்கும் வஹ்ஹாபி என்று சொல்லும் அளவிற்கு விசாலமடைந்தது. எந்தளவிற்கெனில் பம்பாய் அதன் சுற்றுப்புறங்களிலே பிரபல்யமாக இருந்தது. அவ்லியாக்களின் கப்ருகளுக்கு ஸஜ்தா செய்வதை,தவாப் செய்வதை மௌலவி தடுத்தால் அவரை வஹ்ஹாபி என்றார்கள்.அது மட்டுமின்றி வட்டி வாங்குவதை ஹராம் என்றால் அவர்

வஹ்ஹாபி என்றார்கள் (அல்முஹன்னத் 31,32)

மௌலானா ஹள்ரத் ரஷீத் அஹ்மத் கங்கோஹி ( ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த நேரத்தில் இந்த பகுதிகளில் வஹ்ஹாபி என்பதானது சுன்னத்தை பின்பற்றுபவர்கள்,தீன்தாரிகளுக்கு சொல்லப்படுகிறது.(பதாவா ரஷீதிய்யா)

ஹகீமுல் உம்மத் ஹள்ரத் மௌலானா அஷ்ரப் அலி தானவி ( ரஹ்) மனோஇச்சை உள்ளவர்களிடத்தில் "வஹ்ஹாபி" என்ற வார்த்தையின் கருத்தை விளக்கியவாறு கூறுகிறார்கள் ஒரு நபர் என்னிடத்தில் கூறினார்.ஒரு தடவை ஹைதராபாத்தில் உள்ள தகனில் ஒரு நபர் மீது வஹ்ஹாபி என குற்றம் சுமத்தப்பட்டு பிடிக்கப்பட்டார்.இதற்கு காரணம் கூறப்பட்டது நீ எப்பொழுது பார்த்தாலும் குர்ஆனை படித்துக்கொண்டு இருக்கிறாய்! எப்பொழுது பார்த்தாலும் தொழுதவாறு இருக்கிறாய்! இதற்கு அவரின் நலன் விரும்பி கூறினார் இவர் வஹ்ஹாபி

இல்லை ஏனெனில் நான் அவரை நடனக்காரிகளின் நடனத்திலே பார்த்தேன்.இன்ன இடத்தில் இசை இசைக்கப்படும் சபைகளிலே பார்த்தேன்.இன்ன கப்ருக்கு ஸஜ்தா செய்வதை பார்த்தேன்.அப்பொழுது அவர் (குற்றத்திலிருந்து) விடப்பட்டார்.அவர் உயிர் தப்பியது.(மல்பூஜாத் பாகம் 3/101 மல்பூஜ் நம்பர் 168)

மற்றோர் இடத்தில் இவ்வாறு கூறுகிறார்கள்: பித்அத்திலே தீன் இல்லை.தீனுடைய விஷயங்களுக்குதான் வஹ்ஹாபிய்யத் என்று சொல்லப்படுகிறது. (மல்பூஜாத் பாகம் 4 பக்கம் 123 மல்பூஜ் நம்பர் 178)

ஆக வஹ்ஹாபிய்யத் என்பது பித்அத்வாதிகள் குற்றம் சுமத்திய கருத்தில் கூறினால் நாம் வஹ்ஹாபி என்று சொல்வதில் பெருமை கொள்கிறோம்.ஆனால் வஹ்ஹாபிய்யத் என்பதைக் கொண்டு முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியை பின்பற்றுபவர்கள் என்ற கருத்தில்

அல்லது கைரு முகல்லிதீன்கள் என்ற கருத்தில் கூறினால் இதனை நாம் ஆரம்பத்திலிருந்தே மறுத்து வருகிறோம்.இப்பொழுதும் மறுக்கிறோம்.இன்ஷா அல்லாஹ் கியாமத் வரை மறுக்கிறோம்

(1) 'தஸவ்வுப்' மற்றும் 'தரீகத்' அதனின் அமல்களான திக்ர் அன்றாட அவ்ராத்கள் முராகபா என்ற இறைதியானத்தை கடுமையாக கைர முகல்லிதீன்கள் எதிர்க்கிறார்கள்.ஆனால் நாம் அதனை ஆதரிப்பவர்கள் செயல்படுத்துபவர்கள் ( 2)தனி நபரை தக்லீத் செய்வதை அவர்கள் எதிர்க்கிறார்கள். ஆனால் நாம் இதனை வாஜிப் என்கிறோம். (3)நபிமார்கள்,நல்லோர்களின் பொருட்டால் பிரார்த்தனை செய்வதை அவர்கள் மறுக்கிறார்கள்.ஆனால் நாம் அதனை ஏற்கிறோம்.(4)சங்கைமிக்க பெரியோர்களின் பரக்கத்துக்களை அவர்கள் மறுக்கிறார்கள். ஆனால் நாம் அதனை அங்கீகரிக்கிறோம். (5)நபி ( ஸல்) அவர்களின் ஹயாத்தை

(உயிரோடு வாழ்வதை) அவர்கள் மறுக்கிறார்கள் ஆனால் நாம் ஏற்கிறோம்.அது மட்டுமின்றி மறுப்பவர்களுக்கு எதிராக விவாதம் செய்துள்ளோம். ( 6)ரவ்ளா ஷரீபிற்கு ஜியாரத்தின் நிய்யத்தில் மட்டும் பிரயாணம் செல்வதை அவர்கள் மறுக்கிறார்கள் ஆனால் நாம் அமல்களில் சிறந்தது என்கிறோம். ( 7)நபி ஸல் அவர்களின் ரவ்லா ஷரீபிற்கு முன்பாக ஸலாம்,ஷபாஅத்தை வேண்டுவதை மறுக்கிறார்கள் ஆனால் நாம் அதனை ஏற்கிறோம்.

சுருக்கம் என்னவெனில் இதனையெல்லாம் மறுப்பவர்கள் என்ற விதத்தில் நம்மை "வஹ்ஹாபி" என்று விமர்சித்தால் தெளிவான அபாண்டமும் பொய்யுமாகும்.நமது பெரியோர்களும் இவ்விதமாக வஹ்ஹாபி என விமர்சிப்பதற்கு தக்க பதில் அளித்துள்ளனர்.

அஷ்ரப் அலி தானவி ( ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: எவ்வளவு பெரிய அநியாயமும் கோபத்தை ஏற்படுத்தும் விஷயமுமாக

உள்ளது.நமது பெரியோர்களுக்கு அவப்பெயரை ஏற்படுத்துகிறார்கள்.வஹ்ஹாபி என்ற பட்டப்பெயருடன் அழைக்கிறார்கள்.நமக்கு அருகில் ஜலாலாபாத் என்ற நகரம் உள்ளது.அங்கு அண்ணல் நபி ( ஸல்) அவர்களின் மேன்மைமிக்க ஜுப்பா இருக்கிறது என கூறப்பட்டது. அதனை ஹாஜி ஸாஹிப் (ரஹ்) அவர்கள்,மௌலானா ஷைக் முஹம்மது ஸாஹிப் ( ரஹ்) ஜியாரத் செய்தனர்.ஹள்ரத் ரஷீத் அஹ்மத் ( ரஹ்) அவர்கள் இது சம்பந்தமான எனது கடிதத்திற்கு பதில் அளிக்கும்விதமாக கூறியிருந்தார்கள். தடுக்கப்பட்டவைகளை விட்டும் நீங்கி ஜியாரத் செய்வதற்கு சாத்தியம் இருந்தால் ( ஜியாரத் செய்யுங்கள்)

ஒரு போதும் வெறுக்க வேண்டாம்! பித்வாதிகள் மனம் விரும்பியபடி இது வஹ்ஹாபிகளின் கூற்று என்பதாக கூறி அவப்பெயரை ஏற்படுத்துவார்கள் அவர்களிடத்தில் தீன் இல்லை மற்றவர்களையும் மார்க்கம் இல்லாதவர்கள்

என்பதாக கூறுகிறார்கள் (மல்பூஜாத் பாகம் 4/பக்கம்:32, மல்பூஜ் நம்பர் 55)

மற்றோர் சந்தர்ப்பத்தில் கூறுகிறார்கள் ஒரு ஜமாஅத் நம்மை வஹ்ஹாபி என்கின்றனர்.எந்த வகையில் நம்மை வஹ்ஹாபி என்பதாக கூறுகிறார்கள் என்பதானது நமது சிந்தனையில் இதுவரை விளங்கவில்லை.ஏனெனில் இப்னு அப்துல் வஹ்ஹாப் அவர்களின் வழித்தோன்றலில் உள்ளவர்கள் தான் வஹ்ஹாபிகள் அல்லது அவரை பின்பற்றுபவர்கள் ( வஹ்ஹாபி என்று சொல்லலாம்) அவரின் நிலைகள் நூல்களில் உள்ளது.அதனைப் பார்த்து அறிந்து கொள்ளமுடியும்.ஆனால் இன்றைய சூழ்நிலையில் மக்கள் தக்லீதை விட்டு விட்டு கைர முகல்லிதிய்யத்தை தேர்ந்தெடுத்துக்கொண்டார்கள். இவர்களை வஹ்ஹாபி என்றால் கூட சரியானது எனலாம்.அவர்களை பின்பற்றுதல் என்ற வகையில் நமது பெரியோர்களும் இல்லை.தொடர்பு என்ற வகையிலும்

இல்லை.ஏனெனில் அவர்களின் ( கைரு முகல்லிதீன்கள்) அதிகமான சிந்தனை ரீதியான கருத்துக்கள் இப்னு அப்துல் வஹ்ஹாபிடமிருந்து இணைந்துள்ளன.ஆனால் நாம் ஹனபிகள் என்பதானது பிரபல்யமானது.நம்மிடத்தில் அடிப்படைகள் நான்கு குர்ஆன்,ஹதீஸ்,இஜ்மா,கியாஸ் இதைத் தவிர எந்த அடிப்படையும் இல்லை.முஜ்தஹித் பலர் உள்ளனர்.ஆனால் இஜ்மா உம்மத்தின் (ஒட்டுமொத்த கருத்து) மூலம் நான்கு இமாம்களான அபூஹனீபா ( ரஹ்) இமாம் ஷாபியி (ரஹ்)

இமாம் மாலிக் ( ரஹ்) இமாம் அஹ்மத் ( ரஹ்) இதனை விட்டு வெளியேறுவது அனுமதியில்லை என்பதானது நிரூவப்பட்டுவிட்டது.நான்கு மத்ஹபுகளில் எந்த மத்ஹபானது எங்கு நடைமுறையில் உள்ளதோ அங்கு அதனை தான் பின்பற்ற வேண்டும் என்றும் நிரூவப்பட்டுவிட்டது.இந்தியாவிலே இங்கு இமாம் அபூஹனீபா ( ரஹ்) மத்ஹப்

நடைமுறையில் உள்ளது.இதனால் நாம் இங்கு அன்னாரை பின்பற்றுகிறோம்.எந்த மக்கள் நம்மை வஹ்ஹாபி என்பதாக அபாண்டத்தை அள்ளிவீசினார்களோ மறுமை நாளில் அவர்களிடம் கட்டாயம் விசாரணை செய்யப்படும்! (அஷ்ரபுல் ஜவாப்)

வஹ்ஹாபி என்பவர்கள் யார்? என்பதில் பரலேவிய அறிஞர்களின் கருத்துக்களை இனி பார்ப்போம்!

பரலேவிய அறிஞர் முனாளிர் மு்ப்தி குரைஷி கூறுகிறார் அஹ்லே ஹதீஸ்களுக்கு வஹ்ஹாபி என்பதாக பொதுவாக சொல்லப்படுகிறது. ( مناظره گستاخ کون)

பரலேவிய அறிஞர் ஹகீமுல் உம்மத் அஹ்மத் யார் குஜராத்தி கூறுகிறார் இஸ்மாயிலின் நம்பிக்கையாளர்கள் இரண்டு பிரிவுகளாக உள்ளனர்.அதில் ஒரு பிரிவினர் இமாம்களின் தக்லீதை மறுப்பவர்கள் அவர்களுக்கு கைர முகல்லித் என்றும் வஹ்ஹாபி என்றும் சொல்லப்படுகிறது.(جاء الحق)

காஷிஃப் இக்பால் ரிளாகானி அஹ்லுஸ்ஸுன்னாவிற்கு மாற்றமாக ஒரு நூல் எழுதினார் அதனின் பெயர் دیوبندیت کے بطلان کا انکشاف ( தேவ்பந்திய்யத் கே புத்லான் கா இன்கிஷாஃப்) மற்றொரு நூல் கைர முகல்லித்திற்கு எதிராக நூல் எழுதினார் அதனின் பெயர் وہابیت کے بطلان کا انکشاف (வஹ்ஹாபிய்யத் கே புத்லான் கா இன்கிஷாப்) இங்கு கேள்வி என்னவெனில் இருவரும் ஒன்று என்றால் தனித்தனியான பெயர்களில் இரு நூல்கள் எழுதும் தேவை ஏன் ஏற்பட்டது?

முஃப்தி ஹனீஃப் குறைஷ் ஓர் இடத்தில் கூறுகிறார் வஹ்ஹாபி என்ற வார்த்தையின் புழக்கமானது பொதுவாக அஹ்லே ஹதீஸின் மீது பயன்படுத்தப்படுகிறது.(مناظرہ گستاخ کون)

"தஜல்லிய்யாத்" என்ற நூலில் பரலேவிய ஷம்சுல் இஸ்லாம் மௌலானா அன்வாருல் முயீனுத்தீன் எழுதியுள்ளார்கள்: ( அதனின் சுருக்கமான கருத்து) அஹ்மத் ரிளாகான் பல அஹ்லுஸ்ஸுன்னா உலமாக்களை வஹ்ஹாபி என்பதாக கூறினார்கள்.மற்றொன்று அஹ்மத்

ரிளாகான் பரலேவியே மிகப்பெரிய வஹ்ஹாபியாக இருந்தார்.இந்த விஷயமானது மக்களிடத்திலும் பிரபல்யமாக இருந்தது.

மௌலானா முயீனுத்தீன் அவர்கள் அதே நூலின் 44ம் பக்கத்தில் கூறுகிறார்கள் (அதனின் சுருக்கம்) ( 1)இந்தியாவிலே பொதுமக்களின் தாக்கம் இதுவாக இருந்து.அஹ்மத் ரிளாகான் வஹ்ஹாபி மட்டுமல்ல மாறாக வஹ்ஹாபிகளின் தலைவர். ( 2)இதற்கான காரணம் ரிளாகான் பரலேவி பெரியோர்களின் கண்ணியத்தில் இழுக்கை ஏற்படுத்துபவர்,இமாம்களை பின்பற்றும் வளையத்தை விட்டு வெளியேறியவர் ( 3) மௌலானா முயீனுத்தீன் ஸாஹிப் அவர்களின் கண்ணோட்டம் என்னவெனில் ரிளாகான் பரலேவி அவர்களிடத்தில், வஹ்ஹாபி என்பவர் தனது முஜத்தியதை ஏற்கவில்லையோ அவர்தான் வஹ்ஹாபி அந்த நபர் மக்களிடத்தில் அஹ்லுஸ்ஸுன்னாவாக இருந்தாலும் சரி மேலும் ஒருவர் ரிளாகான் பரலேவி முஜத்தித் என்பதை

ஏற்றுக்கொண்டால் அவர் வஹ்ஹாபியாக இருந்தாலும் ரிளாகான் பரலேவியிடத்தில் அஹ்லுஸ்ஸுன்னாவில் கட்டுப்பட்டவராவார்.

நம்மின் மீது வஹ்ஹாபி என்ற குற்றச்சாட்டு கூறப்படுவதானது நாம் அஹ்மத் ரிளாகான் பரலேவியை பெரியோராக ஏற்பதில்லை.அவரின் முஜத்ததிய்யத்தை அங்கீகரிப்பதில்லை.எனவே தான் நமது பெரியோர்கள் சில இடங்களில் அஹ்லுல் பித்அத்திற்கு எதிரில் தங்களை வஹ்ஹாபி என்றார்கள்.

பரலேவிய பரீத் மில்லத் கவாஜா குலாம் ரஷீத் (ரஹ்) கூறுகிறார்கள் சந்தேகமின்றி வஹ்ஹாபிகள் இவ்விதமாக ஸஹாபாக்களை விமர்சிப்பதில்லை, விலாயத்தையும் மறுப்பதுமில்லை.இதன் பிறகு கூறினார்கள் தவ்ஹீதின் விஷயத்திலே வஹ்ஹாபிகளின் கொள்கைகளும் சூபியாக்களின் கொள்கைகளும்

இணைந்துள்ளது. வஹ்ஹாபிகள் கூறுகிறார்கள் நபிமார்கள்,நல்லோர்களிடம் உதவி தேடுவது இணைவைப்பாகும்.சந்தேகமின்றி அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவி தேடுவது இணைவைப்புதான்.தவ்ஹீத் இதுவாக தான் உள்ளது.குறிப்பாக உதவி தேடுவது என்பதானது அல்லாஹ்விடத்தில் தான் தேடவேண்டும்.இய்யாக நஃபுது வ இய்யாக நஸ்தயீன்

பொருள்: உன்னையே வணங்குகிறோம்.உன்னிடத்திலேயே உதவியும் தேடுகிறோம் (مقابیس المجالس)

பரலேவிய அறிஞர் ஸய்யித் அப்துல் கரீம் ஸய்யித் அலி ஹாஷிமி கூறுகிறார்கள்:

அஹ்மத் ரிளாகான் அவர்கள், ஸய்யித் அஹ்மத் ஜைனியின் மாணவரும் முரீதுமாவார். அன்னார் இந்திய வஹ்ஹாபிகளை நசுக்குவதில் அவ்வளவு தீவிரம் காட்டவில்லை. வஹ்ஹாபிகளிடம் தீவிரம் காட்டுவது ஹரமைன் ஷரீஃப் உலமாக்களின் வழிமுறையாக

இருந்தது.ஏனெனில் அவர்கள் ( ஹரமைன் உலமாக்கள்) வஹ்ஹாபிகளை முஸ்லிம்களாக எண்ணவில்லை.அஹ்மத் ரிளாகான் அவர்கள் இங்கு வஹ்ஹாபிகளை முஸ்லிம்களாக கருதியது மட்டுமல்ல மாறாக அஹ்லுஸ்ஸுன்னாவின் குழந்தைகள் என்பதாக கருதினார்கள்.மேலும் உபதேசம் மற்றும் வழிகாட்டுதலின் மூலம் சரியாகிவிடுவார்கள் என்பதாக நம்பிக்கை கொண்டிருந்தார்கள் (المیزان کا امام احمد رضا )

சத்திய உலமாக்களின் மீது வஹ்ஹாபி என்பதாக எவர் குற்றம் சுமத்தினர்

பஞ்சாப்,உபி மற்றும் மற்ற அனைத்து மாநிலங்களிலும் இஸ்லாமிய போராளிகள் தொடர்படியாக உருவெடுத்தனர்.அப்பொழுது சீக்கியர்கள் மார்க்க ரீதியான ஆயுதத்தை பயன்படுத்தினர்.

அவர்கள் ஸய்யித் அஹ்மத் ஷஹீத் அவர்களை வஹ்ஹாபிகள் என்பதாக பிரபல்யபடுத்தினர்.அவர்கள் சரியான இஸ்லாமிய கொள்கையை எடுத்து நடப்பவர்

இல்லை, என சாமானிய முஸ்லிம்களையும் தூண்டிவிட்டனர்.ஸர்ஹறத்,பஞ்சாபிலே ஸய்யித் அவர்களின் மார்க்க ரீதியான நிலைப்பாட்டிற்கு எதிராக கடுமையான எதிர்ப்பு, மறுப்புகள் அளிப்பதும் ஆரம்பமானது.ஃபதாவாகள் வெளியானது.மேலும் ஸய்யித் ஸாஹிபின் அரசியல் ரீதியான வலிமையில் கடுமையான பாதிப்பை ஏற்படுத்தியது. مطالعہ پاکستان رائج ڈگری کلا سز) صداریٹی ایورد اعزاز فضیلت خرم بکس اردو 54(بازار لاہور ص

அஹ்றலுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தான தேவ்பந்த் உலமாக்கள் மீது வஹ்ஹாபிகள் என்பதாக முதன் முதலாக அஹ்மத் ரிளாகான் பரலேவிதான் பழிசுமத்தினார்.

மெளலானா கைருத்தீன் தெஹ்லவி பரலேவிய பெரியோர்களில் உள்ளவர் கூறுகிறார். நமக்கு இந்த நேரம் உறுதியாக இருந்தது.வஹ்ஹாபிகள் என்பவர்கள் நபி (ஸல்) அவர்களின் சிறப்பம்சங்களை ஏற்பவர்கள் இல்லை.ஒரு வேளை ஏற்றாலும் சிறிய சகோதரர்,பெரிய சகோதரருக்கு செய்யும் மரியாதை போன்றுதான்.முஃஜிஸாவை

மறுப்பவர்கள்.கதம் நுபுவ்வத்தை மறுப்பவர்கள்.நபி ( ஸல்) அவர்களின் மீது குறிப்பிடத்தக்க குரோதம் உண்டு. ஏதேனும் அவர்களின் சிறப்பம்சத்தை,சங்கைக்குரிய விஷயம் வந்தால் மனம் பொருமுகிறது. மேலும் மீலாது மஜ்லிஸில் நபி ( ஸல்) அவர்களின் சிறப்புகள் பயான் செய்யப்படுகிறது என்பதனால் மீலாதை மறுக்கிறார்கள்.தரூத் ஷரீப் படிப்பதை தீமையாக கருதுகிறார்கள்.சொல்கிறார்கள் யாரசூலுல்லாஹ் சொல்லாதீர்கள்! ஏனெனில் ரசூலுல்லாஹ் நினைவு அவர்கள் ஏன் பிரியம் வரவேண்டும்? எங்காவது ஏதேனும் விஷயம் நபி (ஸல்) அவர்களின் சிறப்பை,நல்லோர்களின் சிறப்பை,மார்க்க பெரியோர்களின் மேன்மை சொல்லப்படுகிறது என்றால் உடனடியாக ஷிர்க்,பித்அத் என்பார்கள்.இதன் காரணமாக அவர்கள் (நபிமார்கள்,நல்லோர்கள்) அனைவரைப் பற்றியும் அவர்களிடத்தில் குரோதம்,விரோதம் உள்ளது.அவர்களை பழித்துரைப்பது,விமர்சிப்பது

மகிழ்ச்சியாக இருக்கும்.ஒட்டுமொத்தமாக பார்த்தால் வஹ்ஹாபிகள் படைப்புகளில் மிகக்கெட்டவர்கள்.காபிர்களிலே மிகக்கேடுகெட்டவர்கள்.காபிர் என்பதிலே மறுப்போ,முரணோ இல்லை என்பதாக அறியப்பட்டுள்ளது.வஹ்ஹாபிகள் பற்றிய இந்த நிலை உள்ளது.இதிலே ( சிந்தனையில்) நான் வளர்ப்பை பெற்றேன். (آزاد کی کہانی خود آزاد کی زبانی)

வஹ்ஹாபிகள் என்பவர்களைப் பற்றி அருவருப்பான பொய்யான விஷயங்களை பரலேவிகள் புனைந்து தவறான சிந்தனை புகுத்தப்பட்டுள்ளது.இந்த மோசமான கொள்கையை சிறிது மார்க்கப்பற்றுள்ளவர்கள் கூட ஏற்க மாட்டார்கள்.பித்அத்வாதிகளின் இந்த சிந்தனைக்கு எதிரில் அஹ்லுஸ்ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்த தேவ்பந்த் உலமாக்கள் மேற்சொன்ன மோசமான கொள்கைகளை எதிர்த்துள்ளார்கள். நிராகரித்துள்ளார்கள். அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும் நாம் தெளிவாக விளக்குகிறோம் நம்மின் மீது

வஹ்ஹாபியத் என்று குற்றம் சுமத்துவதானது இட்டுகட்டுதலும்,பொய்யுமாகும்.

நாம் அஹ்லுஸ்ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்தவர்கள் பிரிவு சட்டங்களிலே இமாமுல் அஃளம் அபூஹனீபா ( ரஹ்) அவர்களை பின்பற்றுபவர்கள் நமது பெரியோர்கள் சில சமயங்களில் வஹ்ஹாபி என்பதானது வாதத்திற்கு கூறியதாகும்.

இமாம் ஷாபியி ( ரஹ்) அவர்களின் பக்கம் இணைத்து சொல்லப்படும் பிரபல்யமான கவிதை ان كان رفضا حب آل محمد فليشهد الثقلان اني رافضي

நபியின் குடும்பத்தின் பிரியத்திற்கு ராபிளிய்யத் என்று சொல்லப்பட்டால் நான் ராபிளியாக இருக்கிறேன் என்பதற்கு ஜின்,மனிதன் சாட்சியாக இருக்கட்டும்!

எவரேனும் ஒருவர் இந்த கவிதையை அடிப்படையாக வைத்து கூறுவாரா? இமாம் ஷாபியி ( ரஹ்) அவர்கள் ராபிளி என்பதாக (அல்லாஹ் பாதுகாப்பானாக!)

ராபிளிய்யத் என்பதன் மீது சாட்சியை சமர்ப்பிக்கிறார் என்றால் இமாம் அவர்கள் என்ன ராபிளியா? இல்லை ஒருபோதும் இல்லை.மாறாக இமாம் அவர்கள் ஒரு வாதமாகதான் கூறியுள்ளார்கள்.மாறாக உண்மையில் கூறவில்லை.அதாவது இமாம் அவர்களின் கருத்தானது நீங்கள் நபியின் பிரியத்திற்கு பெயர்தான் ராபிளிய்யத் என்று சொன்னால் என்னையும் ராபிளியாக கருதிக் கொள்ளுங்கள் ஆனால் நபியின் குடும்பத்தின் பிரியத்தை விடமாட்டேன்.

நமது பெரியோர்களும் வஹ்ஹாபி என்ற சொன்னதின் நோக்கமும் இவ்வாறுதான் அதனின் விளக்கமானது " நீங்கள் சுன்னத்தின் பக்கம் அழைப்பதையும்,பித்அத்,சடங்கு, சம்பிராதயங்களை தடுப்பதையும் வஹ்ஹாபிய்யத் என்றால்" நாங்கள் வஹ்ஹாபிகள் தான்.ஆனாலும் தவ்ஹீத் பக்கமும்,சுன்னத்தின் பால் அழைப்பையும் நாங்கள் ஒரு போதும் விடமாட்டோம்.

இறுதியாக ஒரு வாதத்துடன் இந்த ஆய்வை முடிக்கிறோம்

தேவ்பந்த் உலமாக்கள், வஹ்ஹாபிகளுக்கு எதிரானவர்கள் என்பதை பரலேவிய அறிஞர் ஏற்கிறார்

எவ்வாறு உலமாயே அஹ்லே சுன்னத்திற்கும் உலமாயே நஜ்தியுடன் கொள்கை ரீதியான கருத்து வேறுபாடுகள் இருக்கிறதோ அதே போன்று உலமாயே தேவ்பந்துக்கும் உலமாயே நஜ்த் மற்றும் முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாபிற்கும் கடுமையான கருத்து வேறுபாடும்,வெறுப்பும் உள்ளது. (رضا مصطفی جماد الاخری ہجری 1407 صفحہ 2,3)

ஆக பரலேவிகள் நமது சத்திய உலமாக்களின் மீது வஹ்ஹாபி என குற்றம் சுமத்தியது அபாண்டமும், பொய்யும்,புரட்டுமாகும் என்பதை அல்லாஹ்வின் கிருபையைக் கொண்டு நிரூபித்துள்ளோம்

முக்கிய குறிப்பு: இந்த கட்டுரையானது அல்லாமா மௌலானா ஹள்ரத் முனாளிருல் இஸ்லாம் ஸாஜித் கான் நக்ஷபந்தி தாமத்

பரகாதுஹும் அவர்களின் علمائے اہل السنہ و الجماعۃ دیوبند پر وہابیت کا الزام اور اس جواب என்ற தலைப்பில் உர்துவில் எழுதியது தமிழில் சுருக்கமாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அதனின் லிங்க் sajidkhannaqshbandi.blogspot.in/2015/07/blog-post_6.html?m=1